[24th March 1961

SRI K. PERIANNAN: நீண்ட நாட்களாக நிலமற்ற ஏழை விவசாயிகள் அந்த நிலத்தில் விவசாயம் செய்துகொண்டு வந்தாலும், இப்பொழுது அந்த நிலத்தை பஞ்சாயத்துகளிடம் ஒப்படைக்கும்பொழுது, பஞ்சாயத்துகள் தரிசு நிலங்களை அதிகப்படியாக குத்தகைக்கு விடுகிறார்கள். அம்மாதிரி நிலமற்ற ஏழைகள் அதிகப்படியான குத்தகை கொடுக்க முடியாத காரணத்தினால், அந்த நிலத்தைக் குத்தகைக்கு விடாமல், அந்த விவசாயிகளுக்கே கொடுக்கும்படி பஞ்சாயத்துகளுக்கு உத்தரவிட முடியுமா என்று கேட்கிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU: புதுச் சட்டப் பிரகாரம் இதெல்லாம் பஞ்சாயத்து நிர்வாகத்தின் கீழே வருகிறது. அதிலே புதுச் சட்டப்பிரகாரம் அரசாங்கம் ஒன்றும் செய்வதற்கில்லை. பஞ்சாயத்து மூலம் தான் செய்யவேண்டும்.

*Adult Education*

* 911 *Q.*—SRI T. S. RAMASWAMI: Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) the number of Adult Education Centres at present;

(*b*) the amount spent on Adult Education in 1959-60; and

(*c*) the number educated for the last year?

THE HON. SRI C. SUBRAMANIAM: (*a*) 1,142;

(*b*) Rs. 3,41,700; and

(*c*) 31,082.

SRI K. VINAYAKAM: Is it not a fact that the expenditure on this account is a mere waste spent on a dying generation and no useful results have accrued out of this and will the Government take stock of the present situation and then adopt new methods, if necessary or give up the entire scheme?

THE HON. SRI C. SUBRAMANIAM: I think the question of waste is a matter of opinion. As far as the dying generation is concerned, I suppose every generation is a dying generation some time or other.

SRI A. VEDARATHNAM: இந்த அவையிலே இம்மாதிரி பல முறை முதியோர் கல்வியைப் பற்றி புகார் கூறப்பட்டு வந்திருக்கிறது. எனவே, இப்பொழுது மத்திய உணவுத் திட்டம் நடைபெறுவதைப் பரிசீலிக்க ஒரு கமிட்டி நியமித்ததுபோல, முதியோர் கல்வித் திட்டம் எப்படி நடைபெறுகிறது என்பதை ஆராய்ந்து அரசாங்கத்திற்கு ரிப்போர்ட்டு செய்ய, ஒரு கமிட்டி அமைப்பதற்கு அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM: இதற்கு கமிட்டி அமைக்க வேண்டியது அவசியமில்லை. இது மாதிரி அதிலே அதிக பலன் ஏற்படவில்லை என்ற காரணத்திற்காக புதிய பள்ளிகள் இனிமேல் ஆரம்பிக்க வேண்டியதில்லை என்றும், வயது அதிகமாக ஆனவர்களுக்கு பயிற்சி கொடுக்கவேண்டியது அவசியமில்லை என்றும், 11 முதல் 18 வயது வரையில் அல்லது 8 முதல் 18 வயது வரையில் இருக்கக்கூடியவர்களுக்கு மட்டும் படிப்பு சொல்லிக்கொடுப்பதற்கு ஏற்பாடு செய்யவேண்டுமென்றும் இப்பொழுது தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

SRI V. K. KOTHANDARAMAN: இந்த முதியோர் கல்வித் திட்டத்தின் காரணத்தினால், கல்வி அறிவு பெற்று பலர் பட்டம் கூட பெற்றிருக்கிறார்கள். ஆகவே, முதியோர் கல்விக்கு அதிகப்படியாகப் பணம் ஒதுக்கி, அவர்கள் படித்து முன்னேற வசதி செய்யப்படுமா ?

4th March 1961]

THE HON. SRI C. SUBRAMANIAM: யாரோ ஒருவர் பட்டம் பெற்றிருக்கிறார் என்றால், அவர் இந்தப் பள்ளிக்கூடத்தில்தான் படித்தாரோ என்னவோ. இருந்தாலும், பயன் எவ்வளவுக்கு இருக்கிறதோ அவ்வளவுக்கு செலவழிக்கப்படும்.

SRI A. A. RASHEED: May I know whether steps have been taken to bring in adult women also under this scheme?

THE HON. SRI C. SUBRAMANIAM: Man includes woman also.

SRI N. MARUDACHALAM: ஸார், முதியோர் கல்வித் திட்டத்தை அவசியம் உள்ள இடங்களிலெல்லாம் ஏற்படுத்த உத்தேசமுண்டா?

THE HON. SRI C. SUBRAMANIAM: அவசியம் எங்கு இருக்கிறதோ அங்குதான் ஏற்படுத்தப்படுகிறது.

SRI S. NAGARAJA MONIGAR: ஸார், முதியோர் எந்தெந்தத் துறையில் முன்னேறியிருக்கிறார்கள் என்று கவனிக்க ஒரு கமிட்டி அமைத்தால் நல்லது என்று கனம் ஸ்ரீ வேதரத்தினம் சொன்னார்கள்; 18 வயதுக்கு உட்பட்டவர்கள்தான் முதியோர் கல்வியில் பயனடைகிறார்கள் என்றாலும், கனம் அங்கத்தினர் விநயகம் எந்த வயது வரை என்று தெரியாததால், இறக்கும் சமுதாயத்தினருக்கு இது வேண்டியது அவசியமில்லை என்று கருதுகிறார்கள்; இந்த சந்தர்ப்பத்தில் இவ்வளவு தூரம் பயன் என்று தெரியாது ஆகையால், அதை விடுத்து வேறு வகையில் செய்யலாமா என்று கருதுகிறார்கள்......

DEPUTY SPEAKER: The hon. Member is making a speech.

SRI S. NAGARAJA MONIGAR: I am coming to the question. அதை நல்ல முறையில் நடத்தத் தவறிவிட்டதாலா இந்த நிலை? இது இறுதியான முடிவா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM: அவர்கள் சொன்ன குழப்பத்தில், எனக்கே குழப்பமாக இருக்கிறது; என்ன கேள்வி என்று புரியவில்லை. (சிரிப்பு)

*Beedi Workers (Scope of Factories Act)*

* 919 Q.—SRI S. M. ANNAMALAI: கனம் கைத்தொழில் அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

சுருட்டுத் தொழிலாளர்கள், தொழிற்சாலை சட்டத்திற்குட்பட்டவர்களல்லவென்று உயர்நீதி மன்றம் தீர்ப்பளித்திருப்பதைக் குறித்து சர்க்கார் எடுத்துக்கொண்ட நடவடிக்கை என்ன?

THE HON. SRI R. VENKATARAMAN: The question whether an appeal should be filed in the Supreme Court against the judgment of the High Court was considered and it was dropped as the Government were advised that this was not a fit case to be taken on appeal. The question of amending the Factories Act suitably has already been taken up with the Government of India and their decision is awaited.

SRI S. M. ANNAMALAI: கொடுக்கப்பட்டிருக்கும் தாள்களில், தமிழ் கேள்வியில் இது "சுருட்டு தொழிலாளர்கள்" என்று இருக்கிறது; இங்கிலீஷில் "Beedi Workers" என்று இருக்கிறது. கனம் அமைச்சர் கொடுத்த பதில் சுருட்டு தொழிலாளிகள் பற்றியா அல்லது பீடித் தொழிலாளர்கள் பற்றியா என்று அறிய விரும்புகிறேன்.